


திருவள்ளுவர் ஆண்டு 1980 தை 2
சென்னை, 15—1—49
வீச்சு 20

# குறள் கொடுத்த குரல்!

[டி. கே. சீனிவாசன்]

மொட்டைத் தலைக்கும் முழங் லுக்கும் முடிச்சுப் போடுவது டியாது என்று சொல்லுவார்கள் லை முகத்திலிருந்து உதித்ததாக ால்லிக் கொள்கிற குலத்தில் ர்த சுந்தரமும் காலிலிருந்து த்ததாக எண்ணிக் கொள்கிற னும் எப்படியோ இணைந்து நண் களானோம். அப்போது நாங் இருவரும் சிறுவர்கள். வாழ் சிக்கல்களை யெல்லாம் ரிந்து வாழத் தேவையில்லாத வத்தில் இருந்தவர்கள். என் பா மட்டும் "ஒசந்த ஜாதிப் ளைங்களோட நம்ப புள்ளைங்க கிற அது நமக்குல்ல தோசம்" று அடிக்கடி சொல்லுவார். ற்கு முதல் காரணம் அவரு ய மூடநம்பிக்கை. இரண்டா காரணம் சுந்தரத்தின் அப்பா டய பண்ணையில் அவர் காரி தர். இதெல்லாம் அந்த வய னக்குத் தெரியாது!

ரதி பாடலின் அடிகளில் அடிக்கடி பாடிக்கொண்டே பது,

"நேற்று முன்னாளில்
வந்த உறவன்றடி— இது
டும் பண்டைக் கால
முதல் இருந்திட்டதாம்"

துதான். அந்த 'அடிகளிலே கண்ட கவர்ச்சி மட்டுமல்ல துக் காரணம், சுந்தரத்தின் மங்களத்தின் முகம் என் மனதை உருக்கியது கூட! நான் அடிக்கடி அவர்கள் வீட்டுக்குப் போவது சுந்தரத்தைத் தேடியா அல்லது அவளைத் தேடியா என்பது எனக்கே புரிந்ததில்லை. "சுந்தரம்" என்று அவர்கள் வீட்டினெதிரே நின்று நான் எப்போது குரல் கொடுத்தாலும் "அண்ணே!........ தேடிண்டு வந்திருக்கான்" என்று உரத்துக் கூவிக்கொண்டே என்னெதிரில் தோன்றுவாள். "மங்களம்" என்று கூப்பிட்டு அப்போது அவளை அவள் தாய் உள்ளே யழைக்கும்போது மனதை உருக்கும் இசை விருந்துக்குத் திடீரென முற்றுப் புள்ளி வைப்பது போலவே எனக்கு இருக்கும்!

அவள் எங்கேயிருந்து—எப்படி —எப்போது என்னைப் பார்த்தாலும் அந்தப் பார்வையில் அன்பு வழிந்தோடுவதைப் போலத்தான் எனக்குத் தோன்றும். பருவமடைந்த பெண்ணை இளமை நிறைந்த வாலிபன் பார்க்கும்போது ஏற்படும் உணர்ச்சிகளில் உடலைப் பொறுத்தவைகளைத் தவிர மற்றவை அத்தனையும் அந்த வயதில் அவளை நான் பார்க்கும்போது எனக்கேற்படும். பாவாடையோடு விடப்பட்டிருந்த பருவத்திலிருந்து மேல்தாவணி போடும் வயது வரை அவளுருவைப் பார்த்துப் பார்த்து ரசித்தேன். மேல் தாவணி சேலையாக மாறப் போகும்போது எங்கள் தொடர்பு அறுந்தே போனது. மேல் படிப்புக்காக என்னை சென்னைக்கு அனுப்பிவிட்டார்கள். சுந்தரம் தான் என்னோடு வந்தானே தவிர சுந்தர உருவத்தால் என் இதயத்தை சொக்கி மயக்கிய அவள் வரவேயில்லை! புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் கவிதை அடிகளின்படி "தூரம் என்ற ஓர் பாவி இடையில் வந்தான்"!

சுந்தரத்துக்கு அவள் எழுதுங் கடிதங்களையெல்லாம் அவன் எனக்குப் படித்துக் காட்டுவான். அவனகப் படித்துக் காட்ட மறந்துவிட்டாலும் நானகத் திருடியாவது படித்துவிடுவேன். குழந்தை உள்ளத்திலிருந்து வெளியே கொட்டும் மழலைக் கருத்துக்களையும் குரலையும்விட அந்த எழுத்துக்கள் எனக்கு மனமோகனமாகத் தோன்றும். அவளுக்குச் சுந்தரம் எழுதும் பதில் கடிதங்களிலெல்லாம் எப்படியாவது என் பெயரையும் நுழைத்துவிடச் செய்வேன். எண்ணக் கடலின் ஆழத்தில் நான் மறைத்துக் காப்பாற்றிய அந்த முத்தை எந்த நிகழ்ச்சியும் உள்ளே புகுந்து எடுத்தோடி விடாதபடி பத்திரமாகப் பாதுகாத்தேன்!

ஒன்று — இரண்டு — மூன்று— நான்கு — என்று எண்ணிக்கொண்டே போவதென்னவோ மிகவும் எளிதாகத்தான் தோன்றும். ஆனல் சென்று மறையும் ஆண்டுகளை எண்ணிக் கணக்கிட்டு எவருங் கழிப்பதில்லை. பல ஆண்டுகள் ஓடி மறைந்த பிறகு தான், "ஐயோ! இத்தனை வருடங்கள் கழிந்துவிட்டனவே!" என்று கவலைப்படுவார்கள். எத்தனையோ கோடைகள் வெப்பத்தை வீசி வேகவைத்துவிட்டு, மாரிகள் மழையைப் பொழிந்துவிட்டு, வசந்தம்

கள் இதயத்தைத் தாலாட்டி இன்பமளித்துவிட்டு என்னிடமிருந்து விடைபெற்றுச் சென்றுவிட்டன. உருவமும் பருவமும் அடைந்த மாறுதலைவிட என் உள்ளம் அடைந்த மாறுதல்தான் ஆச்சரியமானது. ஏதோ ஒரு உலகத்திலிருந்த என்னை யாரோ எப்படியோ வேறு ஒரு உலகத்துக்கு இழுத்து வந்துவிட்டார்கள். பழைய பண்புகள் பழக்க வழக்கங்கள் எல்லாம் ஆறிப்போன புண்ணிலிருந்து உதிர்ந்து விழும் காய்ந்து கட்டியான சிறு தோலைப்போல விழுந்து மறைந்து விட்டன. அந்தப் புத்துலகம் எனக்களித்த புத்துணர்ச்சி புதுவாழ்வில் புகுந்த எனக்குப் பூரிப்பையும், என் எண்ணங்களுக்குப் புது மெருகையும் அளித்தது!

அன்று அறிஞர் "அண்ணா"வை வரவேற்க நானும் தோழர் பராங்குசமும் விடிவதற்கு வெகுநேரம் முன்னமேயே விழித்துப் புறப்பட்டோம். அயர்ந்த தூக்கத்திலிருந்து கட்டாயப்படுத்தி அழைத்துவரப் பட்டதால் அந்தக் கடும் பனி மூடிமூடித் திறக்கும் என் இமைகளை இழுத்துத் தாள்போட எவ்வளவோ முயன்றது. ஆனால் என் துடிக்கும் உள்ளம் துவளும் உடலைத் தட்டிக் கொடுத்து தளராது நடக்கச் செய்தது. கனவில் காணும் தெளிவற்ற உருவங்களைப் போலத் தோன்றிய வீதியோரத்துக் கட்டிடங்களையெல்லாந் தாண்டி ஒட்டிவைத்த ஒளிச் சுடர்கள் பல நிறைந்த "திருச்சி சந்திப்பின்" எதிரே வந்தோம். என் மயக்கமெல்லாம் மறைந்துபோய் ஏதோ ஒரு உற்சாகம் ஓடிவந்து என்னைக் கட்டிக் கொண்டது!

எங்கேயோ வெகுதூரத்திலிருந்து முழுமுகம் காட்டிய வெண்ணிலா பச்சைச் செடிகளும் கொடிகளும் நிறைந்த அந்தச் சிறு தோட்டத்துக்கு ஒளி மெருகிட்டிருந்தது. என்னோடு வந்த பராங்குசம், "மணி நான்கிருக்குமா?" என்று கேட்டார். எதிரே பதித்துவைத்திருந்த கடிகாரத்தை நோக்கிப் பாய்ந்த என் விழிகளுக்கெதிரே "உண்டுண்டுண் டெனஒலித்தது மணிப்பொறி" என்ற கவியரசர் பாரதிதாசன் கவிதை அடிகளுக்கு அபிநயம் பிடித்துக் காட்டியது அந்தப் பொல்லாத கடிகாரம்!

ரேடியோப் பெட்டியின் முள்ளைத் திருப்பினால் அதனால் எங்கெங்கோ யிருந்துதான் குரல்களை இழுத்துவர முடியும். ஆனால் அந்தக் கடிகாரம் தன்மேல் மோதும் இதயங்களையே வீணையாக்கி விதம் விதமான உணர்ச்சி யலைகளை எழுப்பிக் கொண்டிருந்தது. கண்கள் கண்டவுடன் நம்பிக்கையால் களிப்படையும் உள்ளங்கள்—பார்வை அதன் முட்களில் பட்டவுடன் இடிந்துபோன இதயத்தின் எடுத்துக் காட்டாக ஏக்கம் சூழ்ந்து தோன்றும் முகபாவங்கள்—அலுப்பும் ஆழ்ந்த பெருமூச்சுமாக அடிக்கடி அதைப் பார்த்துப் பார்த்துப் பரிதவிக்கும் மனிதர்கள்—இத்தனைக்கும் இந்தக் கடிகாரம் இருந்த இடத்திலேயே அசையாமல் நகராமல் அப்படியே இருந்தது! காற்றடித்த பலூனைப்போல உயரப் பறந்துதிரிந்த என் உள்ளத்தோடு ஊர்ந்து நகர்ந்து பிரயாணிகள் தங்குமிடத்தில் புகுந்தோம். "திண்டுக்கல் மதுரை விருதுநகர் தென்காசி வழியாக திருவனந்தபுரம் போகும் எக்ஸ்ப்ரஸ் வண்டி புறப்பட்டுக் கொண்டிருக்கிறது. போய் ஏறிக்கொள்ளுங்கள்" என்ற எவருடைய குரலையோ உரத்துக் கூவிக் கொண்டிருந்தது அந்த ஒலிபெருக்கி. "புறப்பட்டுக் கொண்டிருக்கும் அந்த வண்டியைப் போய்ப் பிடிக்க எத்தனை பேரால் முடியும்?" என்ற எண்ணம் என்னிடத்தில் ஒரு ஏளனச் சிரிப்பை வரவழைத்தது!

உள்ளே, புகுந்தவுடன் ஒரு பக்கத்தில் தென்னலிராமன் குதிரை வளர்த்த கொட்டடி மாதிரி—நவீன உருவிலும் மெருகிலும்—எழுப்பப் பட்டிருந்த அந்தக் கட்டிடம் எல்லோருடைய பார்வையையும் பற்றியிழுத்ததைப்போல என் கண்களுக்கும் காந்தமானது. "உயர்ந்த ஜாதிக் குதிரைகள் உள்ளே வளர்க்கப் படுகின்றன" என்ற விளம்பரத்தை யெதிர்பார்த்து நிமிர்ந்த என் விழிகளுக்கு எதிரே "பெண்களுக்கு டிக்கட் கொடுக்குமிடம்" என்ற அறிவிப்பு இருந்து ஏமாற்றமளித்தது! மூடியிருந்த அதன் கதவு திறந்தது. உள்ளேயிருந்து ஒரு கிளி வெளியே ஓடிப் பறந்தது. இன்னொரு கிளி தானாகவே உள்ளே நுழைந்து தாளும் போட்டுக்கொண்டது. வாழ்வின் எல்லையை எட்டிப் பிடிக்கும் வயதினரைக் கூட வாலிபத்துக்கு இழுத்து வரும் அந்தக் காட்சியைக் கூர்ந்து கவனித்த என்னைச் சுற்றி வெட்கமும் பயமும் வேலியிட்டன!

கோமளமான முகங்கள் ஒன்றையொன்று பார்த்துத் தங்கள் வசீகரமான கரங்களால் பணத்தையும் டிக்கட்டையும் பரஸ்பரம் பரிமாறிக்கொண்ட அந்தக் கலை சொட்டும் காட்சியைக் கண்டு களிக்க முடியாமல் தேங்கி நின்ற பெண்கள் கூட்டம் தடைசெய்தது. கொஞ்சங் கொஞ்சமாக அந்தக் கூட்டம் கரைந்து மறைந்த பிறகு விழிகளை அந்தப் பக்கம் திருப்பினேன். குனிந்த தலையில் அடர்ந்திருந்த இருண்ட கேசத்தின் இடையிருந்து ஒரு சிவந்த ரோஜா என்னைப் பார்த்து சிரித்தது. மார்பை இறுக்கிப் பிடித்து மூடியிருந்த வெள்ளை ஜாக்கட்டின் கையோரங்கள் மட்டும் வெளிக்குத் தெரியும்படி பக்குவமாக மூடி மறைந்திருந்தது நீலநிறப் பட்டாடை. பேனாவுங் கையுமாக இருந்த அவள் என்னென்ன வண்ணச் சித்திரங்களை வரைந்து கொண்டிருந்தாளோ? ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம். அவள் மனதில் அப்போது ஏதாவது ஒரு எண்ணந் தோன்றியிருக்குமானால், "இந்த அதிகாலை நேரத்தில் வீட்டைப் பெருக்கி கோலம்போட வேண்டி என்னைப் "பிரமன்" படைத்திருக்கும்போது எப்படி இப்படியானேன்?" என்பதாகத்தான் அது இருக்க முடியும்!

பேனாவை கீழே வைத்து விட்டு உடலை நெளித்து வளைத்து அலுப்பைப் போக்கிக் கொண்டாள் அவள். அப்போது என் கண்கள் வழியாக உள்ளே புகுந்து கருத்தில் பதிந்த அந்த "அழகின் அசைவுகள்" இன்பத்தை அப்படியே உதிர்த்துக் கொட்டின. மெல்ல என் பக்கம் முகத்தைத் திருப்பினாள். எதிர்பாராது மின்னிய மின்னல் பார்வையைப் பறித்தெடுத்து ஓடிமறைந்த அடுத்த வினாடியில் என்னென்ன உணர்ச்சிகள் ஏற்படுமோ அத்தனையும் ஒன்றுகூட விட்டுப் போகாமல் என் உள்ளத்தில் உருவெடுத்தன. அந்த முகம் கயிறானது. என் உள்ளம் பம்பரமானது. "ஆசையெனும் கயிற்றினால் ஆடிடும் பம்பரமே" என்ற



இசைத் தட்டின் குரல் எங்கேயோவிருந்து என் காதுகளில் மட்டும் விழுந்தது. சுழலும் செக்கிலே சிக்கிப் பிழியப் பட்ட எள்ளைப் போலான என் இதயத்திலிருந்து வியப்பு வெட்கம் வேதனை மூன்றும் தனித்தனியே வழிந்து ஒன்று கலந்து ஓட ஆரம்பித்தன!

வந்து நின்ற வண்டியிலிருந்து இறங்கிவந்த கூட்டம் என்னை அவளிடமிருந்து துண்டித்ததைப் போலவே அந்த வண்டியில் ஏறப் போன கூட்டம் அவளைக் கடமைக்கு அழைத்துச் சென்றது. "வணக்கம்" என்று நானும் பராங்குசமும் குரல்களை இணைத்துக் கைகளை கூப்பியபோது எதிரில் வந்த "அண்ணா" ஒரு புன்முறுவலால் அதை ஆமோதித்து ஏற்றுக் கொண்டார். எங்களைச் சுற்றிச் சூழ்ந்துகொண்ட வண்டிக்காரர்கள் கூட்டம் "எஜமான்! எஜமான்! முதலாளி! எங்கே போகனும்?" என்று ஆளுக்கொரு பக்கம் அண்ணாவின் கையைப் பிடித்திழுத்தார்கள். நகை முகங்காட்டிய முகத்தில் ஒளிவிட்டு வீசிய கருப்பு பதித்த ஒரு ஜோடி வெள்ளைக் கண்ணாடிக் குண்டுகள் எங்களுக்கு நேரெதிரேதான் இருந்தன. எனக்கு ஏதாவது பேசவேண்டும் போலிருந்தது.

"பாருங்களண்ணா! நம்மைப் பார்த்து "எஜமான்" "முதலாளி" என்கிறார்கள்?" என்றேன்.

"அதற்குக்காரணம் நம் வளமையல்ல, அவர்கள் வறுமைதான்!" என்றார் அண்ணா.

நானும்பராங்குசமும் சிரித்தோம். ஆனால் எதிரிலிருந்த ஜன்னலிலிருந்து வாரியிறைக்கப்பட்ட சிரிப்பு வையகமெங்கும் சிந்திச் சிதறியது!

பராங்குசத்தை அண்ணாவோடு வண்டியேற்றி அனுப்பிவிட்டு திரும்பினேன். சிலிர்த்து மயிர்க் கூச்சலெடுத்த என் உடலுக்குள் எங்கோ ஒளிந்து கொண்டிருந்த உள்ளம் உவகையைக் கொட்டிக் குவித்தது. எழில்நடை நடந்து என்னெதிரே அவள் வந்து நின்றபோது, பொங்கும் "மங்களம்" என் இதயத்தில் எங்கும் தங்கியது. என்ன செய்வது என்று புரியாமல் விழித்தேன்.

"என்னடா......! என்னை நோக்கத் தெரியலையா?"

உறைந்து கட்டியாயிருந்த பனித்துண்டை மின்சார அடுப்பின்மேல் வைத்ததைப்போல என் உள்ளம் உருகிக் கரைந்தோடியது. கொதிப்பேறி என் உடல் வெந்து தீய்ந்தது. அடுத்த விநாடி என்ன நடந்ததோ? "பளிச்" சென்று சத்தங் கேட்டது. என் ஐந்து விரல்களும் படிந்து சிவந்த அவள் கன்னத்தை அப்படியே அழுத்திப் பிடித்துக் கொண்டு நின்றான் அவன். விழிகள் கண்ணீரைக் கக்கின. வேகமாகத் திரும்பி அதைத் துளிக்கூடப் பொருட்படுத்தாமல் கால்கள் போனபடி நடந்தேன்.

மறுநாள் எனக்குக் கிடைத்த அந்தக் கடிதத்தைக் கண்டதும் மன்னிப்புக் கடிதம் என்று எண்ணிப் பிரித்துப் படித்தேன்.

அன்புள்ள நண்பா!

நம்மிருவருக்குமிடையில் இருந்த இணைப்பில் இன்னும் அழியாமல் எஞ்சியிருக்கிற சிறுசிறு ரேகைகள்தான் எனக்கு இக் கடிதம் எழுதத் துணிவளிக்கின்றன. நேற்று நடந்ததைக் கேள்விப்பட்டேன். பரம்பரை பரம்பரையாக "டேய்" என்றழைக்கப்பட்ட பரம்பரையில் உதித்தவன் நீ. வயது குறைவானாலும், "டேய்" என்றழைத்தால் பெருங்கிழவர்கள்கூடப் பணிந்து நடப்பதைப் பார்த்துப் பார்த்துப் பழக்கப்பட்டவள் என் தங்கை. உன் முன்னோர்களில் யாராவது தட்டிக் கேட்டிருந்தால் அந்தக் குணம் எங்கள் குலத்தின் இரத்தத்தில் ஊறியிருக்குமா? அதிகம் எழுத உனக்குத் தேவையுமில்லை, என் மனம் இடந்தரவுமில்லை!

அன்புள்ள,
சுந்தரம்.

வருத்தமோ மன்னிப்போ தெரிவிக்கப்படாதிருந்துங்கூட அந்தக் கடிதம் எனக்கு வேதனையைக் கொடுத்தது. அப்படியே அழுது விட்டேன்.

"தந்தை யகற்காற்றும்
உதவி அவயத்து
முந்தி யிருப்பச் செயல்"

என்ற குறள் என் உள்ளத்தில் உருவெடுத்துக் காறித் துப்பியது. அவயத்து முந்தியிருப்பச் செய்வதற்கு பதிலாகத் தாழ்ந்து தலை குனியச் செய்த என் முன்னோர்களைப் பற்றி எண்ணியபோது...! எங்கோயிருந்து இசைத்தட்டில் பதிவாகியிருந்த,

"வள்ளுவன் குறளை
வையகமெல்லாம்
வாரி யிறையடா தமிழா"

என்ற தோழர் M. M. மாரியப்பாவின் குரல் என் காதுகளில் விழுந்தது. எதிரிலிருந்த புத்தக அலமாரியைப் பார்த்தேன். எனக்கு முன் தோன்றிய "திருக்குறள்" என்ற தலைப்பு "வையகமெல்லாம் வாரியிறைக்க வேண்டியது கூடத் தேவையில்லை. தமிழகமெங்குமாவது தழைத்திடச் செய்" என்று என்னைக் கேட்டுக்கொண்டது.

அலமாரியில் கைவைத்த என் கையில் ஏதோ ஒரு புத்தகம் சிக்கியது. எடுத்துத் தலைப்பைப் படித்தேன். புகழ்பெற்ற ஆசிரியர் D. F. காரகா எழுதிய "என்னுடைய சென்றுபோன நாட்கள்" என்ற புத்தகந்தான் அது. நான் புரட்டிய பக்கத்தில்,

"பைசா நகரத்து சாய்ந்த கோபுரத்தின் எதிரே நான் நின்றபோது என் மனதில் "இது தோன்றிய அன்றிலிருந்து இன்றுவரை நிரந்தர ஆபத்திலேயே இருந்து வந்திருக்கிறது. ஆனால் அழியவில்லை. அதனால்தான் இது ஒரு அதிசயமாகிறது." என்ற எண்ணந்தான் தோன்றியது. அதைப்போலத்தான் இந்த இந்திய சமுதாயமும் அழியப்போகும் நிலையிலேயே நிரந்தரமாக இருந்து வருகிறது. ஆனால் இன்னும் அழியவில்லை, ஏனோ தெரியவில்லை!"

என்ற சொற்கள் தோன்றி புன்முறுவல் பூத்தன!

---

# வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம்!

**'வியாழன்'**

அட சீனு! சமாசாரம் கேட்டியோ! ஒன்னும் முடியாதுடா இந்தச் சூத்திர பசங்களாலே! ராம ராஜ்யம்னு ராமராஜ்யந்தாண்டா!

என்னடா ராமு விஷயம் புரியல்லியே ஏதுக்கு இவ்வளவு குஷி!

போடா மண்டு! சென்னை ஸர்க்காரிலே வகுப்பு வாரியாக உத்தியோகங்களைப் பிரிச்சுத் தரணும்னு அந்த ஜஸ்டிஸ்காரன்கள் இருந்த காலத்திலே ஒருசட்டம் போட்டிருந்தான்களோல்லியோ!

ஆமாம்.

அதைத்தானேடா இன்றுகூட அமல் செய்யராங்க. இன்று மந்திரிகள் பலர் சூத்திராளா யிருந்தாலும், அவர்கள் சரணாகதி விபீஷணர்கள் தானென்றாலும் அந்தச் சட்டத்தைப் பின்பற்றித்தானே உத்தியோகம் தருகிறார்கள்.

போடா போ! எங்க அத்திம்பேருக்கு இந்த மந்திரிகள் தானேடா உத்தியோகம் கொடுத்தாங்க. நாணுவய்யர் பெரிய பதவிக்கு வந்தாரே! அதுமட்டுமா! கோபாலன் எவ்வளவோ ஜூனியராக இருந்தும் 7 சீனியர்களைத் தாண்டிப் பெரிய பதவிக்குப் போனானே! அந்த 7 சூத்திரன்களும் கூச்சல்போட்டுப் பார்த்தான்களே என்ன நடந்தது. ஒரே வரி "மத்தியஸர்க்கார் உத்தரவு" என்று கூறி அவர்கள் கூச்சலை அடக்கிவிட வில்லையா?

அடபைத்தியமே! இது சகஜம் இப்படிச் செய்யாவிட்டால் மந்திரிகளே பதவியில் இருக்க முடியாதேடா! நம்ம பத்திரிகைகள் இவர்களைச் சும்மாவிட்டு விடுமா? நம்மசீமா சாஸ்திரி சீனிவாச அய்யங்கார் சாமா அய்யங்கார் ராமு அய்யர் இவர்களெல்லாம் ரிட்டயரான பெரிய உத்தியோகஸ்தர்கள். இவர்கள் சும்மாவா இருப்பார்கள் உடனே டில்லிக்கு ஓடி பட்டேலிடம் சொன்னால் சரியாகிவிடுகிறது.

அப்படியா!

பின்னென்ன! தர்மமாகக் கொடுத்துவிடுகிறார்களோ நம்மவாளுக்கு இந்த உத்தியோகங்களை! என்னதான் விபீஷணன்களாயிருந்தாலும் நம்பக் கூடாதப்பா இவர்களை! திடீர் திடீரென்று சமயாசமயங்களில் இவர்களுக்கு இனஉணர்ச்சிவந்து விடும்

என்ன ஓய் அவாளுக்கு ஏதுங்காணும் இன உணர்ச்சி? எல்லாப் பெரிய முக்கிய உத்தியோகங்களும் நம்மவா கையில் தானே இருக்கு! இப்பக்கூட ஜட்ஜ் பதவிகள் எல்லாம் நம்மவாளுக்குத் தானே தரப்பட்டன. மத்திய ஸர்க்கார் புதிதாக நியமிக்கப்பட்ட மந்திரிகள் கூட, நம்மவாத்தானேப்பா.

அது சரிதான் அதையெல்லாம் **இவர்கள்** செய்வதில்லை. அங்கே நம்ம ராஜாஜீ தானே கவர்னர்—ஜெனரல். அவர் இட்டது சட்டம்! நேரு பட்டேலெல்லாம் அவர் முன்னால் விட்டில்கள் தானே. அவர் சொல்லிவிட்டால் ஆமாம் சாமி போடவேண்டியதுதானே!

ஓய் போங்காணும்! ராஜாஜீ செய்வது அக்கிரமம். எல்லாப் பதவிகளையும் ஐயங்கார்களுக்கே கொடுக்கிறார். நம்மவாளைக் கவனிப்பதில்லை. ஒரு ஐயரையாவது அவர் கவனித்தாரா?

அட பிராமணா! உனக்குமா புத்திகெட்டு விட்டது! இந்தச் சமயத்தில் அந்தப் பிரச்னையைக் கிளப்பாதே! எப்படியாவது பிராமண பெரிய உத்தியோகங்களைத் தட்டிக் கொண்டால் போதும் என்று திருப்திப்படு.

ஏன்?

அடபைத்தியமே! ஐயருக்கு, ஐயங்காருக்கு—ஆச்சாரிக்கு என்றெல்லாம் பிராமணனைத் துண்டு போடாதே! எந்தப் பெயரிலிருந்தாலும் நாம் பிராமணத்தானே! நாமும் விசிஷ்டாத்வைததை ஏற்றால் நாமும் ஐயங்கார்தானே! அவர்கள் அத்வைதிகளாகிவிட்டால் ஐயர்கள் தானே! டிரேட் மார்க்கை மாற்றிக் கொள்ளும வேலைதானேடா இது! இதைப் பெரிசாக்கிவிட்டால், இது வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவத்தை ஊர்ஜிதப் படுத்தும். பிறகு சூத்திரா இதன்படி உத்தியோகம் கேட்டால், நம்மில் ஒன்றிருவர் உத்தியோகம் பெறுவதுகூட இல்லாமல் போய்விடும்.

இப்போதும்தான் அந்தச் சட்டம் இருக்கிறது அதனால் நமக்கென்ன பாதகம்?

இப்போது பாதகமில்லை யென்றால், அடுத்த தேர்தலில் காங்கிரஸ் விபீஷணுநிகளே ஜெயித்து வந்து மந்திரிகளாவார்கள் என்பது என்ன உறுதி? அந்தக் கருப்புச் சட்டைக்காரன்கள் வந்துவிட்டால், இந்தச் சட்டத்தைவைத்துக் கொண்டு, பிராமணனுக்கு உத்தியோகமில்லாமல் செய்துவிடுவான்களே!

ஆமாம் ஆமாம்! அதற்காக இப்போதே ஏதாவது வழி செய்து கொள்ளவேண்டும். ராஜாஜீக்கு இதைத் தெரிவித்துவிட வேண்டுமே! மகஜர்கள் தயாரிக்கட்டா! லக்ஷம் கையெழுத்து வேணும்னாலும் நான் ரெடியா கொண்டு வந்துட்றேன்.

அட சும்மா இரப்பா! உன் மகஜர்களைக் கண்ட பின்தான் அவர்களுக்கு உணர்ச்சி வருமோ! அவா தலைக்குமேல் உயர்ந்த பதவியிலிருக்கும் வரை நமக்கு எந்தவித ஆபத்துமில்லே. இன்னும் 100 மந்திரிகள் மாறட்டும் எல்லாம் கருப்புச் சட்டைக்காரன்களே வரட்டும் ஆச்சாரி அரச பதவியிலுள்ள வரை அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையடா!

ஏன் அப்படிச் சொல்றே!

கேள்! அப்படிக் கேள்! அந்த வகுப்புவாரிப் பிரதிநிதித்துவச் சட்டமிருக்கேல்லியோ! அதற்குச் சீட்டுக் கிழித்து விட்டார்கள் மத்திய ஸர்க்கார். மத்திய ஸர்க்கார் என்றால் நம்ம ராஜாஜிதான்.

அபபடியா! தொலைந்ததா? நம்ம பாடு வேட்டைதான்!

அதற்குள் சந்தோஷப்பட்டு விடாதே! முழுதும் கேள்! 1948ம் ஆண்டிலே இந்தியா பார்லிமெண்டில் திவாகர் என்பவர் அரசாங்க உத்தியோகங்கள் தரும் விஷயங்களிலே வகுப்பு வித்தியாசங்களைப் பார்க்கக்கூடாது வகுப்புவாரிப் பிரதிநிதித்துவமும் கூடாது என்று ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். அதைப் பட்டேல் ஆட்சேபித்து, அனுபவபூர்வமாக ஏற்படக்கூடிய சங்கடங்கள் ஏதேனும் உண்டா என்பதைக் கண்டறிந்த பிறகு, இதை ஒப்புக் கொள்ளலாம் என்றார்.

அடப்பாவி மனுஷா!

அட அவசரக் குடுக்கை! பட்டேலை வையாதே! அவர் பெரிய ராஜதந்திரி! ஏன் இந்த ஆட்சேபத்



தைக் கிளப்பினர் தெரியுமா? திவாகர் பிராமணர்; வகுப்புவாரி வேறுபாடு அரசாங்க உத்தியோக விஷயங்களில்கூடாது என்றுஅவர் தீர்மானங்கொண்டுவந்தா தென்னாட்டான்கள் எவவைது எதிர்க்கப் போறன் என்று நினைத்து, "சாதி வித்தியாசங்களே நாட்டிற்குப் பெரியபீடை அதை ஒழிக்க இது முதல்படி" என்று அவர் கூறி வைத்துவிட்டார். சாதிகள் இருக்கக்கூடாதென்று கூச்சல்போடும் கறுப்புச் சட்டைக் காரன்களும் இப்படிச் சொன்னால் எதிர்க்கமாட்டான்களல்லவா?

டில்லி சட்டசபையில் கறுப்புச் சட்டை ஏதடா?

இல்லை சரிதாம்பா. இங்கே படைதிரட்டிக்கொண்டு கூச்சல் கிளப்பி விடுவான்களே! அங்கே கூட ஒன்றிரண்டு சூத்திரன்கள்—திவாகரின் உட்கருத்தைத் தெரிந்து எதிர்த்தால்! அதற்குத்தான் பட்டேல் சட்டென்று அணைபோட்டு, அதை ஆலோசனைக்கு விடவேண்டுமென்றார். இப்போது அது மாகாண ஸர்க்கார்களுக்கு ஆலோசனைக்கு வந்திருக்கிறது. மற்ற மாகாணங்கள் திவாகர் தீர்மானம் சரியெனக் கூறிவிடும்.

நம் மாகாணம் எதிர்க்குமோ!

இல்லையப்பா! நம் மாகாண மந்திரிகள் இந்தி விஷயத்தில் முதலில் தமிழ் நாட்டில் கட்டாயமில்லை என்று கூறி, அதற்குக் கறுப்புச் சட்டைக்காரன்களைக் காரணமாகக்காட்டி, பிறகு 2 ஊர்களில் கூட்டம் போடச் சொல்லிக் காங்கிரஸ்வாலர்களைத் தூண்டிவிட்டு, பிறகு கட்டாயம்தான் என்று சொல்லிவிடவில்லையா? அப்படித்தான் இதிலும் ஒரு நாடகம் நடக்கலாம். நம்மளவா சொல்லாமல் சீக்கிரமாகவே முடியும்.

அட ஒரு சந்தேகம் இந்தச் சட்டத்தால் சாதிகளே இல்லை—எல்லாம் ஒன்றுதான் என்று வந்துவிட்டால்...

பைத்தியமே பைத்தியம்! திவாகர் என்ன அவ்வளவு மூளைகெட்டவரா? பட்டேல் நேரு ஆகியவர்கள்தான் என்ன சனாதனதர்ம விரோதிகளா? அல்லது திராவிடக் கட்சியினரா? வாழ்க்கையிலும் சாதிபேதம் கூடாது என்று பேசினாரே தவிர உத்தியோகங்களில் அதைக் காட்டக்கூடாது என்றுதான் தீர்மானம் கொண்டு வந்திருக்கிறார். "சாதிகள் எதுவுமிருக்காமல் ஒழியவேண்டும். தஸ்தாவேஜுகளில் வாழ்க்கையில் எதிலும் சாதிப் பெயரே வரக்கூடாது. சாதிகள் கூறுவது, பெயருக்குப் பின்னால் ஒட்டவைப்பது, எழுதுவது எல்லாம் சட்டவிரோதம்" என்று முதலில் சட்டம் போட்டு, அதைக் கடுமையாக நிறைவேற்ற இறங்கினால்தானேடா உண்மையில் சாதிகள் போகும்! சாதிகளை ஒழித்துவிட வேண்டும் என்பது அவர்களுடைய எண்ணமாயிருந்தால் முதலில் இப்படித்தானே சட்டம் செய்து, இதையல்லவா கடுமையான முறையில் அமுலில்கொண்டு வருவார்கள். இப்படிச் செய்தால் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் கூடாது என்ற பேச்சுக்கே இடமில்லையேடா! வகுப்புகள் இருந்தால்தானே வகுப்புவாரிப் பிரிவு ஏற்படும். ஆகவே, இப்படிச் செய்யாமல், வகுப்புவாரிப் பிரிவினை உத்தியோக விஷயத்தில் கூடாது என்று தீர்மானம் கொண்டு வந்திருப்பதால், சாதிகள் எல்லாம் அப்படியே இருக்கவேண்டும்! ஆனால் உத்தியோகங்களெல்லாம் பிராமணனுக்கே வரவேண்டும் என்ற நோக்கத்தோடு இருப்பது உனக்குத் தெரியவில்லையா!

ஆமாம் இது சட்டமாகிவிட்டால் உத்தியோக விஷயத்தில் சாதி பார்க்கக்கூடாது என்று கூறிக்கொண்டு, எல்லா உத்தியோகங்களையும் சூத்திராளுக்கே கொடுத்துவிட்டால், நாம் நம் உரிமையைக் கேட்கக்கூட வழியில்லாமற் போய்விடுமே.

அட அசடே! நீ சொல்வது உண்மைதான். ஆனால் உத்தியோகம், அந்தஸ்து — திறமை ஆகியவைகளைப் பார்த்துத்தான் தரப்படும், இல்லாவிட்டால் சர்க்கார் நிர்வாகம் கெடும் என்று ஓர் உத்தரவு வந்துவிடாதா! திறமைசாலிகளையே பதவியில் அமர்த்த வேண்டுமென்றால், கூடாது என்று யாரால் சொல்லமுடியும்! திறமைசாலிகள் என்ற போர்வையில்—நம்மளவாளைத் தவிர வேறு எந்தச் சூத்திரன் பதவிக்கு வந்துவிட முடியும்? அவர்களில் திறமைசாலிகள் இல்லை என்று சொல்லவில்லை ஆனால் திறமையை அளக்கும் கருவி பெரிய பெரிய பதவிகளிலிருக்கும் நம்மளவாளிடத்தில் தானேடா இருக்குது. எங்காவது ஒரு சிறு தவறு கண்டுபிடித்தால் அதை மகம்மேரு மலையளவு தவறுக்கிவிட மாட்டானா நம்மவா ஆகவே, இந்த முயற்சியால், நிச்சயமாக ராமராஜ்யம்தான்! இன்னும் 50 வருஷத்துக்கு நம்பளவாதான்! நம்ம ராமராஜ்யந்தான்! அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையடா! பட்டேல்—நேரு—ஆச்சாரி அச்சு உள்ளவரை அச்சமென்பதில்லையடா.

ஆமாண்டா ஆமாண்டா அச்சமென்பதில்லையடா.

---

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

மகிணனை எண்ணினள்! பெண் உள்ளம் பதைபதைத்தது சொல்லொணாத் துக்கத்தில் ஆழ்ந்தாள்.

தான் வீசிய வாளுக்கிரையாகி, பிணமாகக் கிடந்த தன் காதலனின் மேல் புரண்டு அழுதாள். அவன் முகத்தைப் பார்த்துப் பார்த்துக் கதறினள்! "அத்தான்! தேசத்தின் மீதுகொண்ட பற்றிற்காகத் தங்களைக் கொன்றேன். இதோ! இதோ! உங்கள்மேற்கொண்ட அன்பிற்காக, குன்றுக பாசத்திற்காக. குறையாதகாதலுக்காக.." என்று கூறிக்கொண்டே வாளைத் திருப்பித் தன் மார்பிற்கெதிரில் நிறுத்தினள்! அய்யோ! அவளும் சாய்ந்தாள்! இரத்தத் தடாகத்தில் மூன்று உடல்கள் மிதந்துகொண்டிருந்தன! சோழனின் புலிக்கொடி விண்ணில் தென்றலோடு விளையாடிக் கொண்டிருந்தது!

---

வாசகர்களுக்கு

## ஒரு வார்த்தை!

இளஞ்செழியன் கடுமையான கண்வலிக்குள்ளாகி டாக்டரிடம் சிகிச்சை பெற நேரிட்டது, மணிமொழியாரின் குறள் மாநாட்டு இடையறு வேலை ஆகிய இக்காரணங்களால் சென்ற வாரம் போர்வாள் இதழைக்கொண்டு வரமுடியாமல் போனதோடு, இந்தஇதழையும் முன் அறிவித்தபடி பொங்கல் இதழாகவோ அதிக பக்கங்களுடனோ வெளியிட இயலவில்லை. வாசகர்கள் மன்னிக்கவேண்டுகிறோம். அடுத்த இதழ் வழக்கம் போல் 22—1—49 சனியன்று வெளிவரும்.

# வள்ளுவர் வகுத்த வாழ்வியல்

[புலவர் பு. செல்வராஜ்]

★

"எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவேயல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே" என்றார் ஒரு தமிழ்ப் பெரியார். வாழ்க்கையில் மக்கள் யாவரும் இன்பமாக வாழவேண்டும் என்பதே பல்லூழிக் காலமாகத் தமிழ்ப் பெருங்குடி மக்களுடைய பண்பாடாக இருந்துவந்தது.

தமிழர்கள் மிகப் பழங்காலத்திலே இன்ப வாழ்வு நடாத்தினர் என்பதற்கு, இன்றுள்ள சங்க நூல்களே போதிய சான்றுகளாகும். தமிழர்களுடைய வாழ்வு வீரம் செறிந்தது, அறத்தை அடிப்படையாகக்கொண்டது, நாகரிகமிக்கது, கலைப்பண்பாடுடையது, இன்பமயமானது என்பதைப் பழந்தமிழ் நூல்கள் எடுத்தோதுகின்றன.

தமிழன் கடாரத்தை வென்றான், சிங்களத்தை அடிப்படுத்தினான், இமயத்தில் இலச்சினை பொறித்தான், யவனரைப் பணியாட்களாக அமர்த்தினான் என்பனபோன்ற பல சேதிகள் தமிழ் நூல்களில் காணப்படுபவை தமிழனின் வீர வாழ்வை விளக்குகின்றன.

தமிழன் உரோமருக்கு உடையளித்தான், எகிப்தியருக்கு உணவளித்தான், யவனருடன் தொடர்பு கொண்டான், சீனருடன் நட்புக் கொண்டான், உலக நாடுகளுடன் உறவாடினான், முத்து, அரிசி, மிளகு, இஞ்சி, சந்தனம், தோகை, கன்னல் போன்றவற்றை உலகமக்களுக்கு வழங்கினான். இவற்றை விளக்கத் தமிழ் நூல்களில் உள்ள சான்றுகள் மட்டுமல்ல; அரிசி, சந்தனம், தோகை, இஞ்சி, கன்னல் போன்ற தமிழ் வார்த்தைகள் இன்றும் மேனாட்டு மொழிகளில் சிதையாமல் வழங்குவதும் ஒரு பெரும் சான்றாகும்.

தமிழன் தன் மொழியை உயிரென ஓம்பினான். வளர்த்தான். உலகெலாம் பரவச் செய்தான். தமிழனின் சிறப்பு அன்று உலகெலாம் போற்றப்பட்டது. நார்வே, ஸ்வீடன், டென்மார்க் போன்ற வடமேற்குக் கோடிநாட்டு மொழிகளில்கூடத் தமிழ் வார்த்தைகள் இடம் பெற்றிருக்கின்றன. ஆரியரின் மிகப் பழைமை வாய்ந்த நூலெனக் கூறப்படும் ரிக்வேதத்திலும் தமிழ் வார்த்தைகள் பல காணப்படுகின்றன வெனின், தமிழன் வளமுள்ள, சிதையாத, சீரிளமை வாய்ந்த மொழியை உடையவன் என்பது தெளிவாகிறது.

கடலில் வரும் கலங்கள் வழிதவறிவிடாதிருக்கக் கலங்கரை விளக்கங்கள் (Light House) வைத்திருந்தான் தமிழன். எலிமயிரினும் நுண்ணிய, கடல் நுரையினும் வெண்மையான ஆடைகளை உடுத்தான் தமிழன்; மாடமாளிகை கட்டினான்; பூஞ்சோலைகள் அமைத்தான்; இன்னிசை, கூத்து, நாட்டியம் நடைபெற அரங்குகள் அமைத்தான்; நீர்வளமும் நிலவளமும் பெருகச் செய்தான்; காலமழை தவறினால் விளைவு தவறுமுறையைக்கண்டு, மழைபெய்யாவிடினும் நிலம் விளையும் வழிவகுத்தான், ஓவியம் தீட்டினான்; காவியம் பலபுனைந்தான்; கல்லிற் கவின் பெறும் உருவங்களைச் செதுக்கினான்; காதல் மிக வளர்த்தான்; பெண்மை போற்றினான்; அறிவை வளர்த்தான்; நிலமிசை நீடு வாழும் வகையறிந்தான் என்பவற்றைப் பழந்தமிழ் நூல்கள எடுத்தியம்புவதொன்றே, தமிழன் எத்துணை நாகரிகமும் கலைப்பண்பும் உடையவன் என்பதை விளக்கப்போதிய சான்றாகும்.

தமிழன் நல்லாட்சி நடத்தினான்; பட்டினங்களையும் பாக்கங்களையும், ஊர்களையும் சேரிகளையும் ஒழுங்கான முறையில் அமைத்தான். நாட்டிற் குடியேறிய ஆரிய அன்னியர்கள் உறைந்த பகுதிகளைப் பார்ப்பனச் சேரி என்று ஊர்ப்புறத்தே ஒதுக்கினான். நகரங்களில் பொது மன்றங்கள், நூல் நிலையங்கள், படிப்பகங்கள், பூங்காக்கள் நிறுவினான்; மழை நீர் வடிய வடிகால்கள், கழிநீர் வடியக் கால்வாய்கள் அமைத்தான்; நடுநிலை பிறழா நீதி வழங்க ஐம்பெருங்குழு, எண்பேராயங்களை ஏற்படுத்தினான்; பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்து அலைக்கும் கொல் குறும்பும் இல்லாத, பசியும் பிணியும் சேராப் பெருத, பெரும் பொருளால் பிறநாட்டாராலும் விரும்பத்தக்க ஆட்சியை அமைத்தான் என்பன தமிழனின் அரசியல் அறிவையும் திறனையும் எண்பிக்கின்றன.

இவ்வளவு உன்னத நிலையில் வாழ்ந்த தமிழன் இன்று எந்நிலையில் உள்ளான்? அம்மம்ம சொல்லும் தரத்ததோ! இன்று தமிழன் வாழ்வில், சாதி மதம், சமயம், வருணம், தருமம், சாத்திரம், கோத்திரம், சாமி, பூதம், கோவில், குளம், ஸ்தலம், தீர்த்தம், மோட்சம், நரகம், பாபம் புண்ணியம், தலைவிதி கர்ம பலன் போன்றவைகளெல்லாம் புகுந்தன; தமிழன் அடிமையானான்; அறிவிழந்தான்; நிலை குலைந்தான்; உரமிழந்தான்; தம் முன்னையோர் வாழ்வு முறையை உணரவும் வகையற்றான்; மீளாப் படுகுழியில் வீழ்ந்தான்; ஏன் இந்நிலை? யாரால் இந்நிலை?

ஆரியர்—பார்ப்பனர் இந் நாட்டில் அடியெடுத்து வைக்கத் தொடங்கிய நாளே, தமிழகம் வீழ்ச்சியுறத் துவங்கிய நாளாகும். ஒரு குலத்துக்கொரு நீதி கூறுதல், உயர்வு தாழ்வு கற்பித்தல், கோடானு கோடி தெய்வங்களை வணங்குதல், தாயை மகன் பெண்டாளுதல், மகளைத் தந்தை புணர்தல், ஆண் புணர்ச்சி, பொய், சூது, களவு, காமம், கொலை ஆகிய தீச்செயல்கள் புரிதல், ஒருத்தி பலரைக் கூடுதல், ஒருவன் பல பெண்களைச் சேருதல், ஒழுக்கக்கேடு, பெண்களை அடிமைகளாக—தட்டுமுட்டுச் சாமான்களாக—மாயைகளாக, பேய்களாக மதித்தல், வேள்வி மூலம் ஆடு மாடுகளைக் கொன்று புசித்தல், பலியிடுதல், மதுவருந்துதல், போன்றவற்றைக் கற்பிக்கும் இழிநூல்களெல்லாம் வேத—ஆகம—சாஸ்திர—இதிகாச புராணங்கள் எனும் பெயரால் தமிழ் மக்களிடை ஆரியரால் பரப்பப்பட்டு தமிழ் மக்கள் தாழ்நிலையடைந்து விட்டனர்; நாளுக்கு நாள் இழிநிலை நோக்கித் தாழ்கின்றனர். இந்நிலை மாறவேண்டாமா?

இந்நிலை மாறவேண்டுமென்றுதான் திருவள்ளுவர், சிவவாக்கியர், திருமூலர், தாயுமானார், இராமலிங்க அடிகள் போன்ற தமிழ்ப் பெருமக்கள் உழைத்தனர்; அறவுரைகள் கூறினர். ஆனால் தமிழ் மக்கள் மனத்துக்கண் மாசுபடிந்தோராய்க் கிடந்தமையால், அப்பெரியார்தம் நல்லுரைகளைப் படிக்கத் தெரிந்தனரே ஒழிய, உள்ளுறையை உணர்ந்து அந்நெறியினைக் கடைபிடிக்க முனையவில்லை.





இப்பெரியார்களுள் **வள்ளுவர் வகுத்த நெறி** மனிதப்பண்பாடு, தன்மானம், அன்பு, அறன் முதலியவற்றுடன் மனிதன் மாண்புடைய இன்பவாழ்வு வாழுதற்குரியது. அந் நன்னெறி என்ன?

வள்ளுவர் காட்டிய கடவுள்—வாலறிவன், பற்றற்றான், விருப்பு வெறுப்பு அற்றவன், ஐம்பொறி அவித்தான், தனக்குவமை இலாதான், அறக்கடல், எவ்வுயிரிலும் உறைபவன் என்பதே. வள்ளுவர் துவக்கமாகக்கூறிய முதற் குறளே, கல்வியை முதலில் வைத்து, கல்வியைக் கற்றறிந்து பகுத்தறிவைப் பெற்றபிறகே, கடவுளைப்பற்றி அறிதல் வேண்டும் என்னும் கருத்துப்படவே, எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலை உடையன என்பதை முதலில் நினைவூட்டி, உலகுக்கு ஒரே கடவுள்தான் என்பதைப் பின்னால் கூறியுள்ளார். ஆகவே அறிவுதான் கடவுள் அது உள்ளத்தில் உறைவது, விருப்பு வெறுப்பற்றது, எல்லா உயிரிடத்திலும் தங்கியிருப்பது, ஆசையற்றது என்று விளக்கியுள்ளார்.

மடாதிபதிகள், ஆசார்யர்கள் வேதாந்திகள், சித்தாந்திகள், தத்துவஞானிகள் போன்ற மத வேடம் தரித்து, மக்களை மடமையில், மதவெறியில், ஆழ்த்தித் திரியும் பேர்வழிகளின் செயலை வெளிவேடம் என்று கூறி, மனத்திலே களங்கமில்லாதிருப்பது அறமே யன்றி, சொல்லிலும் செயலிலும் நல்லவனைப் போன்று நடித்துத்திரிவது வெளிவேட ஆடம்பரமே (மனத்துக்கண் மாசுஇலன் ஆதல் அனைத்து அறன்; ஆகுல நீரபிற) எனக் கண்டித்துள்ளார்.

மனத்தில் தீய குணங்களை வைத்துக் கொண்டு நீரில் பன்முறை மூழ்கிமூழ்கி ஆசாரத்துடனிருப்பதாகப்பாவனை செய்து உலகை ஏமாற்றும் நடிப்புக்காரர் பலருளர் (மனத்தது மாசு ஆக மாண்டார் நீர் ஆடி மறைந்து ஒழுகும் மாந்தர் பலர்) என்று சமய வேடக்காரர்களை வெளிப்படுத்துகிறார்.

அறிஞர்கள் தீயவை என்று கூறும் செயல்களை ஒழித்துவிட்டால் அதுவே பெரிய அறமாகும். மொட்டையடித்துக் கொண்டும் சடைமுடிவளர்த்துக் கொண்டும் திரிதல் வேண்டவே வேண்டாம் (மழித்தலும் நீட்டலும் வேண்டா; உலகம் பழித்தது ஒழித்து விடின்) என்று பண்டார—மடாதிபதிக் கூட்டத்திற்கு அறிவு காட்டியுள்ளார்.

'பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும், சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமையான்' என்பதன் மூலம் எவ்வகையானும் உயர்வு தாழ்வு மனிதர்களிடை இல்லை என்பதை விளக்கியுள்ளார். கல்வி கேள்விகளில் சிறந்து ஆராய்ச்சி அனுபவங்களிலிருந்து நுட்பமான அரம் போன்ற கூர்மையான அறிவு உடையவனாக இருந்தாலும் மக்களை மக்களாக மதித்துச் சமத்துவமாகப் பழகாதவன் மரத்தைப் போன்றவனே (அரம்போலும் கூர்மையரேனும் மரம் போல்வர் மக்கள் பண்பு இல்லாதவர்) என்கிறார் குறளாசிரியர்.

எந்த நாட்டில் சாதிகள் பற்றியும் மதங்கள் பற்றியும், கடவுள்கள் பற்றியும் கூட்டங்களும் அவற்றின் அடிப்படையில் ஏற்படுகிற அரசியலும், நாடாள்பவனைக் கெடுக்கின்ற ஐந்தாம் படையும், உட்பகைஞர்களும் இருக்கின்றனரோ அந்நாடு ஒருகாலத்திலும் முன்னேறாது (பல் குழுவும், பாழ் செய்யும் உட்பகையும் வேந்து அலைக்கும் கொல் குறும்பும் இல்லது நாடு) என விளக்கம் தந்துள்ளார் வள்ளுவர்,

மனந்தளராது உழைப்பவர் ஊழ்வினை என்பதைப் புறங்காட்டி ஓடச்செய்வர் (ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவு இன்றித் தாழாது உஞற்றுபவர்) என்று கூறி, வள்ளுவர் தலைவிதி கர்மபலன்களைக் கண்டிக்கிறார். அதேபோன்று மெய்வருத்த முயற்சி செய்தால் தெய்வத்தாலாகாததும் செய்துமுடிக்கப் பெறும் (தெய்வத்தாலாகாதெனினும் முயற்சிதன் மெய்வருத்தக் கூலிதரும்) என்று கூறி விதிப்பயனுக்கு முற்றுப்புள்ளி வைத்துள்ளார்.

தெய்வத்தாலாகாத காரியத்தையும் மனிதன் முயற்சியால் சாதிக்கமுடியும் என்பதுமட்டுமல்ல. பிச்சை எடுத்துத் துன்பப்பட்டுத்தான் வாழவேண்டுமென்பது ஒரு மனிதன் தலைவிதியானால் அத்தலைவிதியைப் படைத்த கடவுளே அழிந்து ஒழியட்டும் (இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் பரந்து கெடுக உலகு இயற்றியான்) என்று கூறியுள்ளார்.

பெண்மக்கள் உயர்வை வள்ளுவர் பல குறட்பாக்களில் வற்புறுத்தியுள்ளார். இல்லறம், மனைவாழ்க்கை, அவர்கள் பொறுப்பே. அவர்கள் வாழ்க்கைத்துணை என உயர்த்தப்படுகின்றனர்! பெண்ணிற் பெருந்தக்கயாவுள என்று கேட்டு, பெண்களைச் சிறப்பித்து, அவர்களால் பெறும் இன்பத்தைவிட மோக்ஷம சிறந்ததல்ல (தாம் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல் தாமரைக் கண்ணான் உலகு) என்று விளக்கியுள்ளார்.

இவ்வண்ணம் திருக்குறள் முழுவதும் 1330 குறட்பாக்களும் அவற்றிலடங்கியுள்ள 12,000 சொற்களும் மக்கள் இன்ப வாழ்க்கை நடத்துவதற்கு உறுதுணை செய்ய வல்ல நல்ல நெறியைப் புகட்டுவனவாகவே இருக்கின்றன,

இத்தகைய பெருமை மிகு திருக்குறள் பார்ப்பனர் ஆக்கத்திற்கு அரண் செய்வதாக இன்மையால் கி. மு. 1-ஆவது நூற்றாண்டில் எழுதப்பட்ட திருக்குறளுக்கு, கி. பி. 13-ஆவது நூற்றாண்டில் வாழ்ந்த பரிமேலழகன் எனும் பார்ப்பனன், தீச்சிந்தையுடையவனாய், தமிழை நன்குபயின்று, வள்ளுவர் குறள், வடநூற்பொருளை மேற்கொண்டு தமிழில் எழுதப்பட்ட நூல் என்னும் கருத்தை ஆங்காங்கே வற்புறுத்தி, பல இடங்களில் வலிந்து பொருள்கொண்டு காழ்ப்புக் கருத்துடன், உரையெழுதிவிட்டான், நிலைகெட்ட பிற்காலத் தமிழ்ப்புலவர் குறட்பாக்களின் மூல பாடத்திலிருந்து நேரே பொருள் கொள்ளாமல். பரிமேலழகனின் பிழைபட்ட கருத்துக்களையே சரியெனக் கருதி அவற்றையே மக்களிடை பரப்பிவந்தனர். எனவே, வள்ளுவர் தந்த நெறியும் ஏட்டளவோடு நிற்கும் வேதாந்தமாக மாறியதே ஒழிய மக்கள் அவற்றைக் கடைப்பிடித்து வாழ்வை இன்பமுடையதாக ஆக்கிக் கொள்ள முடியவில்லை.

ஆகவேதான் இவ்விழி நிலைகண்ட ஈரோட்டு வள்ளல்—புத்துலகச் சிற்பி—பெரியார் ஈ. வெ. ரா. வள்ளுவர் வகுத்த நெறியைக் கடைப்பிடித் தொழுக, தமிழ்ப் பெருமக்களை அறைகூவி அழைக்கின்றார். வள்ளுவர் நெறியினையே கடந்த 25 ஆண்டுக் காலமாகத் தமிழ் மக்களிடையே எடுத்தோதி வருகின்றார்.

**வாழ்க பெரியார் இராமசாமி!**

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

கிருர் தெரியுமா? உங்களது போர் ஆற்றலை எவ்வளவு பாராட்டுகிருர் தெரியுமா? மாவீரராகிய தாங்கள் வெறும் குதிரைப் படைத் தலைவனுக மட்டுமிருப்பது தகாது என்று அவர் நினைக்கிருர்! ஆகவே தான்......''

''நினைக்கிருர்! ஆகவேதான்...''

''அப்படிக் கூறினர்?''

''வீரா! யோசித்துப்பார்! நன்ருக, தீர, யோசித்துப்பார்!.....!' சாகசத்தோடு ஆரியன் மெதுவாகப் பேசினன். இடை இடையே ''முடியாது! ஒரு நாளும் முடியாது'' என்று உரத்த குரலில் மகிணன் கூறிக்கொண்டிருந்தான். ஆரியன் விடாது, மயக்கமொழிகளை, மாய வார்த்தைகளை வீசிக்கொண்டிருந்தான், நீண்ட நேரமாக முடியாது என்று கூறிக் கொண்டு வந்த மகிணன், பிறகு சிறிது கோபம் தணிந்து ''தகாது'' என்ருன். ஆரியன், தான் சொல்வதை எப்படியாகிலும் ஒத்துக்கொள்ளும்படி செய்ய பற்பல விதமாக, பற்பல ஆசைகளைக் காட்டிப் பேசினன்! வீரன் தயக்கத்தோடு ''ஆபத்தாயிற்றே'' என்ருன். தன் நோக்கம் வெற்றியடைந்து வருவதைக் கண்ட ஆரியன் மேலும் ஒரு சில தைரிய வார்த்தைகளைக் கூறினன் வஞ்சகமாக வலையை வீசினன்! ஆரிய வைரி என்று தன்னைக் கூறிக்கொண்டிருந்த மகிணன், முடிவில் ஆரிய வலையில் வீழ்ந்தான்!

''வீரா! அப்படியானல் இன்றிரவே நாம் புறப்பட வேண்டும்!''

''ஏன் நாளைய தினம் சென்ருல் என்ன?''

''வேண்டாம் வேண்டாம்! இன்றிரவு செல்வது தான் நல்லது!''

''சரி ஆரியரே! மஞ்சிகை எனக்காகக் காத்துக்கொண்டிருப்பாள்! அவளிடம் கூறி, விடை பெற்றுக் கொண்டு வேகமாக வந்து விடுகிறேன்!''

''நான் உமக்காக இங்கேயே இருக்கிறேன்!''

''சரி!''

புத்தம் புதியதொரு ஆசை மகிணனின் உள்ளத்தில் புகுந்தது. தன் எதிர் காலத்தைக் குறித்துசிறிது நேரத்திற்குள் விதவிதமான இன்பக் கனவுகள் கண்டு விட்டான்.

* * *

ஆற்றங் கரையோரம்! குளிர்ந்தடிக்கும் தென்றலில் தலையசைத்துக் கொண்டிருந்த நாணற்காடு! ''கூக் கூக்'' எனக் கத்தும் குயிலின் இன்னிசை! சுற்றிலும் இயற்கைப் பெண்ணின் பச்சை நிறப் பட்டாடை அவிழ்ந்து விரிந்து கிடந்தது! கரையோரத்தில் ஓர் மாமரம்! மரக் கிளைகளில் சிட்டுகளின் விளையாட்டு! அணில்களின் பாய்ச்சல்! கிளையொன்று தாழ்ந்து நீண்டு வளர்ந்து ஆற்றின் நீரை முத்தமிட்டுக் கொண்டிருந்தது. அந்தக் கிளையின் மீது கிளிமொழி மஞ்சிகை சாய்ந்து கொண்டிருந்தாள்! விழிகள் காதலனின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தன. கரடுமுரடான கிளையின் மேற் பாகத்தை அவளது மலர்க் கைகள் ஏனே தடவிப் பார்த்துக் கொண்டிருந்தன! நேரம் சென்று கொண்டே இருந்தது! இந்நேரமாகியும் அத்தான் ஏன் இன்னும் வரவில்லை என்றெண்ணி வருத்தமடைந்தாள்!

நாணற் காட்டிற்குள் சலசலப்புக் கேட்கவே திரும்பிப் பார்த்தாள்! ஆம்! மகிணன் தான் வந்து கொண்டிருந்தான்! வருவது, வஞ்சியின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட காதலன்தான்! இந்தப் பரந்த உலகில் ஒரே ஒருவன் கன்னியின் உயிரோடு உயிராகக் கலந்தானே. அவன்தான் வந்தான்!

பேசும்பொற் பதுமை பேசாது, தலைகுனிந்து தரையைப் பார்த்துக் கொண்டு நின்ருள்! அருகில் வந்தான். ''கண்ணே'' என்ருன் அந்த வார்த்தையில் தான் எவ்வளவு ஆவலும் அன்பும் நிறைந்திருந்தது! 'மஞ்சிகா'' என்ருன் மங்கை பேசவில்லை.

''என் இன்பமே''

இளங் குமரியிடமிருந்து இதற்கும் பதிலில்லை.

''வண்ணப் புருவே; என் வடிவழகி''—இப்படிக் கொஞ்சினன். வனிதையின் வாய்திறக்கவில்லை. வார்த்தைகள் பயனற்றனவென்று தெரிந்துகொண்டான். கையில் வைத்துக் கொண்டிருந்த போர் வாளைப் புற்றரையில் வைத்தான். கன்னியிடம் விளையாட கைகளுக்கு உத்தரவிட்டான். சீறினள்! சினம் மிகக்கொண்டு சிற்றிடையாளை நோக்கினன்.

''கண்ணே, எவ்வளவு ஆவலோடு வந்திருக்கிறேன்! இன்ப வெள்ளத்திற்குக் கோப அணை கட்டித் தடுக்கிருயே, தகுமா இது!''

''ஆகா! தகாது! நான் மட்டும் தனிமையில் தவித்துக் கொண்டிருந்தது தகும் அப்படித்தானே?''

''கோவை இதழ் அசைத்து இன்னும் கோப வார்த்தைகளை உருக்கிருயே கண்ணே!... என் தோள்கள் துடிதுடிக்கிறதே, பார்! என் இதயத்தின் துடிதுடிப்பைக் கேள்!''

''முடியாது!''

முடியாதா, அவனல் அவளைச் சாந்தப் படுத்த? முடிந்தது! மழை போல் இன்பம் இருவர் உள்ளத்திலும் பெய்தது!

''கண்ணே!''

''அத்தான்''

''இன்னும் சில நாட்களில் நீ ராணியாகப் போகிருய்!''

''மன்னர் தாங்களானல் மகாராணி நான்தானே!''

''ஆமாம், மன்னனுகப் போகிறேன்!''

''எந்தத் தேசத்திற்கோ?''

''இந்தத் தேசத்திற்குத்தான்! சீருஞ் சிறப்பும் பெற்ற செந்தமிழ்ச் சோழ மண்டலத்திற்குத்தான், என் கண்ணின் ஒளியே கட்டாயம் அரசனுகி விடுவேன்!'' உணர்ச்சியோடும் உற்சாகத்தோடும் மகிணன் பேசினன். முதலில் கேலிக்கு அவன் பேசுகிருன் என்றெண்ணி அவளும் வார்த்தை விளையாட்டில் ஈடுபட்டாள். பிறகு புரிந்து கொண்டாள், உண்மையாகத்தான், உள்ளத்தில் பொங்கி வழியும் ஆசையினல்தான் அவன் அப்படிப் பேசுகிருன் என்று! அச்சம் நிறைந்த குரலில் ''அத்தான்'' என்ருள்.

''பட்டத்தரசியே, யாது வேண்டும்?''

''தாங்கள் என்ன சொல்கிறீர்?''

''மஞ்சிகா, ஏன் பயப்படுகிருய்? சோழநாட்டின் சிம்மாசனம் எனக்குச் சொந்தமென்றேன்!''

''எனக்கொன்றும் புரியவில்லையே அத்தான்''!

''சோழமகனுக்கே புரியாதபோது, உனக்குப் புரியாததில் வியப்பென்ன கண்ணே?''

''தெளிவாகக் கூறுங்களேன் அத்தான்!''

''சேரமன்னனுக்கு நான் உதவி அளிக்கப் போகிறேன். பதிலுக்கு அவன் இந்நாட்டின் வேந்தனுக்கப் போகிருன் என்னை!''

''என்ன? என்ன?''

''ஆமாம்! ஆமாம்! இன்றிரவு நானும் சேரனும் சந்தித்துப் பேசப் போகிறோம்!''





''என்ன? சோழநாட்டின் பரம விரோதியினிடத்திலா தாங்கள் பேசப்போகிறீர்!...... துரோகமா? கள்ளங் கபடமற்ற நம் மன்னருக்குத் துரோகமா?''

''அல்ல! துரோகமல்ல! தகுதிக்கும் திறமைக்கும் ஏற்ற அந்தஸ்தைப் பெறப்போகிறேன்''

'அத்தான், தாங்களா இப்படிப் பேசுகிறீர்! சோழ மன்னன் சோமுகனின் ஒப்புயர்வற்ற குதிரைப் படைத் தலைவரான தாங்களா இதைப் பகர்கிறீர்?''

''கண்ணே! இதில் உனக்கு விருப்பம் இல்லையா! உன் காதலன் பரந்த பூமண்டலத்தின் சிம்மாசனத்தில் கொலு வீற்றிருக்கப் போவதைக் காண உன் கண்கள் இச்சை கொள்ளவில்லையா? நீ, மகா ராணியாக மனதில் ஆசை பிறிடவில்லையா?''

''ஐயையோ! அத்தான் தகாததை எல்லாம் கூறுகிறீரே! விருப்பம், இச்சை, ஆசை—யாருக்கு? எனக்கா? நம் மன்னனுக்குத் துரோகம் செய்தா? நறுந்தாய் நாட்டினை வேற்ருனுக்கு அடிமைப் படுத்தியா?''

''உன் உள்ளம் உலக அனுபவம் பெருதது!''

''அல்ல! துரோக நினைப்பு உலவாதது!''

''பிதற்றுகிருய்!''

''அத்தான், அத்தான், கெஞ்சுகிறேன்! தங்கள் கால்களைக கட்டிக்கொண்டு கண்ணீர்விட்டு கதறியழுது வேண்டுகிறேன், இந்த வஞ்சக எண்ணத்தை விட்டு விடுங்கள்! தன் சுகத்தையே பெரிதென்றெண்ணி, தாய்நாட்டை அன்னியனுக்கு அடிமையாக்கி விடாதீர்?''

''மஞ்சிகா! பேதைப் பெண் நீ! ஏதேதோ கூறுகிருய்!''

''எவரின் உப்பைத் தின்று உடலை வளர்த்தீரோ, அவருக்கே துரோகம் செய்வது சரியா? தகுதியா?''

''உப்பைத் தின்றேன் உண்மை! உதிரத்தைக் கொட்டி அவன் நாட்டை நான் பெரிதாக்கி யிருக்கின்றேன் நினைவிருக்கட்டும்!''

''உண்மை! அதற்காகத்தானே நாடு உம்மைப் புகழுகிறது!''

''புகழ்கிறது! அதனல் எனக்கென்ன பயன்? செங்குருதியைக் கொட்ட நான், சிம்மாசனத்தில் கொலுவீற்று சிங்கார வாழ்வு நடத்த வேருருவஞ? இதனை நான் ஒப்பேன்! இனியும் சகித்துக் கொண்டு சும்மா இரேன்!''

''ஐயோ! எந்தப் பாவியோ, வஞ்சகனே, தங்களின் தூய உள்ளத்தை மாசு படியச் செய்து விட்டானே!''

''உள்ளத்தில் படிந்திருந்த மாசைத் துடைத்தான் அந்த மகானுபாவன்! தெளிவு பெற்றேன்!......கண்ணே, ஆரியன் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கிருன்......''

''ஆரியனு? ஐயோ! நான் நினைத்தது சரியாகி விட்டதே! அந்தக் கயவனின் மோசவலையில் சிக்கியா இப்படியெல்லாம் பேசுகிறீர் அத்தான் வேண்டாம்......''

''கண்ணே!''

''தூர நில்லுங்கள்! என்னைத் தொடாதீர்! அன்னைத்திரு நாட்டின் அடிமை வாழ்விற்கு அடிகோலும் துரோகியே, இனியும் என்னைத் தொடாதீர்! தூய என் உடலைக் களங்கப் படுத்தாதீர்! நாட்டுப் பற்றுக்கொண்ட என் உள்ளத்திலும் நஞ்சு எண்ணம் புகச்செய்துவிடாதீர் அத்தான்! அத்தான்! திரும்பத் திரும்ப கெஞ்சுகிறேன்! வேண்டாம்!

அவள் துடிதுடித்துப் பதறிப் பேசுவதை மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான். அவள் அழுதாள், கெஞ்சினள், கோபமாகப் பேசிப் பார்த்தாள், பயனில்லை! அவள் கண்களில் தாரை தாரையாக நீர்வழிந்தது! பெற்றுவளர்த்த திருநாடா? கட்டி மகிழ்விக்கும் காதலா? இரண்டில் எது பெரிது? எது சிறந்தது? எதற்கு முதலிடம்?—சிந்தித்தாள், சிந்தித்தாள், நீண்ட நேரம் சிந்தித்தாள்.

''கண்ணே!'' அன்பான குரலில் அழைத்தான்.

''அத்தான்! தங்கள் உள்ளம் மாறிவிட்டதா?''

அவன் சிரித்தான்.

''மஞ்சிகா! நேரமாகிறது! உடனே இப்பொழுதே நானும ஆரியனும் சேரநாட்டிற்குப் புறப்படவேண்டும்! தடுக்காதே அன்பே, என் ஆருயிரே, மகிழ்ச்சியோடு எனக்கு விடை கொடுத்து அனுப்பு!''

அவள் பேசவில்லை. அவள் உள்ளம் குழம்பியது. அழுதாள்! கண்களைக் குளமாக்கினள்! மனப் போராட்டம்!

''ஆமாம்! இவரை விடக்கூடாது ...இப்பொழுது விட்டால்...சோழ நாடு என்றென்றைக்கும் அடிமை நாடாகிவிடும்...ஆம், அதுதான் சரி! வீரமகளிரின்கடமை அதுதான்...'' இப்படி யோசித்து ஒரு முடிவிற்கு வந்தாள்.

குனிந்து புற்றரையில் கிடந்த போர்வாளை எடுத்தாள்! அவன் புன்னகை செய்தான்! அவள் கண்கள் சிவந்தன! முகம் பயங்கரமான மாற்றத்தைப் பெற்றது!

''கண்ணே! ஏன் இப்படிப் பார்க்கிருய்? காதல் வழியும் உன் கண்களில் கடுங் கோபமா? ஏன் இந்த மாற்றம்?......''

''என்னைப்பெற்றுவளர்த்த தாய் நாட்டிற்கு, புலவர் பெருமக்கள் போற்றிப் புகழ்ந்து பாடிய பொன்னாட்டிற்கு, நன்செய்யும் புன்செய்யும் நிறைந்த வளமிக்க சோழ நாட்டிற்கு வரப்போகும் இன்னலைத் தடுப்பதற்காக......''

கொஞ்சும்மொழி வீசி, கோதையின் அருகில் வந்தான்! கோவை இதழ்களை உக்கிரத்தோடு கடித்துக் கொண்டு, வீரத்தோடு வாளை நிமிர்த்தினள்! ஆசை மேலிட அருகில் அருகில் நெருங்கினன்! உறுதி உறுதி என்று முணுமுணுத்தாள்!

''மஞ்சிகா! என்ன இது?'' என்று அலறி அவன் கேட்டு முடிப்பதற்குள், அவள் ஓச்சிய வாள் அவன் மார்பைத் துளைத்துக் கொண்டு வேகமாக உள்ளே சென்றது! ''ஐயோ! மஞ்சிகா! ஆரிய சூழ்ச்சியால் துரோகியானேன்; ஆனேன்.'' என்று கதறித் துடித்துக்கொண்டே கீழே சாய்ந்தான்.

''அடி காதகி, என்ன காரியம் செய்துவிட்டாய் நீ?' என்று யாரோ அதட்டிப் பேசுவதைக் கேட்டதும் திடுக்கிட்டு வீராங்கனை திரும்பிப் பார்த்தாள்.

''அடே வஞ்சகா! இங்கு நீயே வந்துவிட்டாயா?'' என்று சினந்து கூறி, புலிபோல் ஆரியனின் மேல் பாய்ந்தாள்! அவன் சாய்ந்தான்!

உக்கிரம் குறைந்து சோர்ந்து உட்கார்ந்தாள். ஆரியனின் முகத்தைப் பார்த்தாள். ''காதகா! உன் சூழ்ச்சியினல் அல்லவா என் உயிருக் குயிரான காதலர் இறக்க நேரிட்டது'' என்று ஆத்திரத்தோடு பேசி அவன் முகத்தில் காரி உமிழ்ந்தாள்!

(5-ம் பக்கம் பார்க்க)

கற்பனைச் சித்திரம்:

# மஞ்சிகை

—இராதா மணாளன்—

"மல்லிகை, முல்லை, ரோஜா மலர்ந்து மணம் வீசுகிறது!"

"மணத்தை அள்ளி வீசாது, மலர்கள் வேறு என்ன செய்யும்?"

"குளிர்ந்த தென்றல் தவழ்ந்து விளையாடுகிறது!"

"தென்றலின் தன்மையே அது தானே"

"தேன் இனிக்கும். கனியும் கற்கண்டும் தித்திக்கும்!"

"இது இயற்கைதானே, அத்தான்".

"மஞ்சிகா! மலரிலுள்ள தேனை மொண்டு குடிக்க வண்டு ரீங்காரமிடுகிறது!"

"அதைவிட வண்டிற்கு வேறு வேலைதான் ஏது!"

"வர்ண இதழ் விரித்து வாவா என வண்டை மலர் ஆவலோடு அழைக்கிறது!"

"ஹூஹூம்! பிறகு"

"வண்டும் வந்துவிட்டது! தேன் குடத்தையும் கண்டுவிட்டது!"

"ஆகா!"

"மஞ்சிகா!"

"அத்தான்?"

"தடை எதுவுமில்லையே தேன் குடிக்க?"

"தட்டியாவிடும் மலர்?"

"தட்டாது! ஆனால் வண்டின் தாகத்தை வண்ண மலர் இன்னும் புரிந்துகொள்ளவில்லையே!"

"வா வா என அழைத்தது என்றீரே?"

"ஆமாம், அழைத்தது! அதனால் தான் வண்டும் அருகில் நெருங்கியது!.........கண்ணே! மஞ்சிகா! இன்றாகிலும் நாம்... ..."

"ஓகோ! சுற்றி வளைத்து சுவர்க்கபுரி பயணத்திற்கு அன்றுபோல் இன்றும் பீடிகை போட ஆரம்பித்து விட்டீர்களா?"

"சொர்க்கம், நரகம்! இவை சூழ்ச்சிக்கார ஆரியரின் வஞ்சக வலையின் கண்ணிகள் அல்லவா, கண்ணே?"

"உண்மைதான் அத்தான்! அறிவற்றவர்களை வஞ்சகவலை வீசி ஆரியன் பிடிக்கிறான்! காதலெனும் வலைவீசி தாங்கள்... ..."

"உன்னைப் பிடித்து விட்டேன் என்கிறாயா?"

"ஆமாம்!"

"முற்றும் தவறு!"

"வேறு என்னவாம்?"

"காதலை, வலை என்று கூறுவதே தவறு!"

"பின்பு?"

"தன்னிடம் பிடிபட விரும்பாத ஒன்றைக் கள்ளத்தனமாகப் பிடிக்க வஞ்சகமாக வீசியது வலை! ஆனால் காதல்......"

"காதலில் மட்டும் கள்ளத்தனம் இல்லையோ?"

"ஆமாம்! கள்ளத்தனமிருக்கிறது இருவரிடத்திலும்! .....காதல் என்பதோர் பள்ளம்! அதில் உள்ளம் ஒன்றுபட்டு இருவர் வீழ்வர். என்றென்றும் பிரிய மனமில்லா இன்பத்தில் ஆழ்வர்! அவர்கள் தாம்......"

"தாங்களும் நானும்—அப்படித் தானே?"

"வேறு எப்படி இருக்கமுடியும், கண்ணே?"

இப்படி, சோழ மன்னன் **சோமுகனின்** குதிரைப் படைத்தலைவன் **மகிணனும்**, குடியானவன் **குன்றனின்** மகள் **மஞ்சிகையும்** ஊரின் புறத்தே இருந்த பூந்தோட்டத்தில், பூரிக்கும் உள்ளத்தோடு புரண்டு வழியும் புது வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தார்கள்.

வேகமாக குதிரைவரும் காலடிச் சப்தத்தைக் கேட்டதும், திடுக்கிட்டு இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். போர்வீரன் ஒருவன் தன்னை நாடி வருவதைக் கண்டதும், மகிணன் எழுந்து நின்றான். போர்வீரன் அருகில் வந்ததும், குதிரையை விட்டுக் கீழே இறங்கி மகிணனுக்கு வணக்கம் செய்தான்.

"வீரா! என்ன செய்தி?"

"மன்னர் தங்களை உடனடியாக அழைத்துக் கொண்டு வரும்படி கூறி அனுப்பினார்."

"ஏன்?"

"சேர மன்னர் ஓலை அனுப்பி உள்ளார். அது சம்பந்தமாக அவசரமாக அரசர் உங்களிடம் பேச வேண்டுமாம்."

"ஓலையில், சேரமன்னர் என்ன எழுதி யிருந்தாராம்?"

"தலைவா! நான் அறியேன்!"

"மன்னர்முகம் எப்படி யிருக்கிறது?"

"கோபத்தால் சிவந்திருக்கிறது!"

"சரி! வீரா, நீ போ, விரைவாக நான் வருகிறேன்."

வீரன் சென்றுவிட்டான். காதல் ஊஞ்சலில் உந்தி உந்தி ஆடி, உவகைச்சோறு உண்ண துடிதுடித்துக்கொண்டிருந்த இளங் காதலர், இச் செய்தியைக் கேட்டதும் புறப்பட்டனர்

* * *

சித்திரவேலைப்பாடுகள் நிறைந்த மாளிகையில் சோழ மன்னன் சோமுகன் அமைதியை இழந்து, சிந்தனையில் ஆழ்ந்து இப்படியும் அப்படியும் நடந்துகொண்டிருந்தார். யாரோ வரும் காலடி ஓசையைக் கேட்டதும், திரும்பிப் பார்த்தார்.

"மன்னவா வணக்கம்!"

"மா வீரா, வருக!"

"சேரமன்னர் ஏதோ ஓலை அனுப்பினாராமே?"!

"ஆம்! அவனுக்கு மரண வோலை தயாரிக்க வேண்டுமாம்!"

"விளக்கமாகக் கூறுங்கள் அரசே."

"இருபது ஆண்டுகளுக்கு முன்பு சேரனுக்கும் நமக்கும் ஒரு பெரிய யுத்தம் நடைபெற்றது. அப்பொழுது நீ குழந்தை. ஆகவே அது உனக்குச் சரியாகத் தெரிந்திருக்காது.. ......"

"மன்னர் மன்னவா, நான் அதைக் குறித்து நிறைய கேள்விப்பட்டிருக்கிறேன்."

"சோழ நாட்டில் காலடி எடுத்து வைத்த சேரனின் படையின் குருதியை மண்ணில் கொட்டச் செய்தது, உம் தந்தையின் தலைமையில் சென்ற நம்படை! இப்பொழுது அரசாளுகை விருக்கும் **சேரப்பனின்** அண்ணன் **சேதனன்** போர்க்களத்திலேயே மாண்டான். அவன் இறந்ததினால்தான், இவன் பட்டத்திற்கு வரமுடிந்தது!.........அப்பொழுது சேர நாட்டின் சில பகுதிகள் நம் வசமாயின. இப்பொழுது அந்தப் பகுதிகளைத் திருப்பித் தந்துவிட வேண்டுமென்று கேட்கிறான். இல்லையானால் சேரனின் படைகள் சோழநாட்டினுள் நுழைய நேரிடுமாம். அதற்கு நாம் சித்தமா என்று அந்தக் கபவன் கேட்கிறான்!"

"எவ்வளவு ஆணவம்!"

"அந்த ஆணவம்தான் அவனை அழிவை நோக்கி அழைத்துக் கொண்டு வருகிறது!"

"வேந்தே, பிரதான படைத்தலைவர் என்ன கூறினார்!"

"போருக்குத் தயாரென்றார்!"

"அரசர்க்கரசே, நானும் அதனையேதான் கூறுகிறேன்!"

"மகிணா! மிகமகிழ்ச்சி கொள்கிறேன். அந்தப் பகுதிகள் வேண்டுமென்று தோழமை முறையில் சேரன் கேட்டிருநதால் கொடுத்துவிட்டிருக்கலாம். அப்படியொன்றும் நாம் மண்ணாசை பிடித்தவர்கள் அல்லவே! அந்த அற்பன் ஆணவத்தோடு அதிகாரக குரலில் கேட்கையில் கொடுத்துவிட்டால்......"

"நம் உள்ளத்தில் வீரமும், கையில் போர்வாளும் இருக்க வேண்டிய அவசியமில்லையே!"

"வீரா! போருக்கு வேண்டிய ஏற்பாடுகளை விரைவாகச் செய்!"

"சித்தம் அரசே!"

* * *

சேரனின் படைகளுக்கும், சோழனின் படைகளுக்கும் போர் மிகக் கடுமையாக நடந்தது! சேர சோழ போர்வீரர்களின்செங்குருதி மண்ணில் குடம்குடமாகக் கொட்டியது. ரத்தஆறு ஓடியது! தலைகள் உருண்டன! வெட்டுண்ட கைகள் சிதறிக் கிடந்தன. தலையற்றஉடல்களைக் கழுகுகள் கொத்தித்தின்று கொண்டிருந்தன. நரிகள் ஊளையிட்டுக் கொண்டு ஓடிவந்தன.

பிண நாற்றம் எங்கும் வீசியது! அய்யோ அம்மா அப்பா, என்ற ஒலி வானை முட்டியது! யார் வெற்றியடைவார்கள், யார் தோல்வியடைவார்கள் என்பது முடிவு செய்ய முடியாமலிருந்தது. போர் விடாது பத்துநாட்கள் நடந்து கொண்டிருந்தது. இரு பகுதியினரும் வீரத்தோடும் உக்கிரத்தோடும் போரிட்டுக் கொண்டிருந்தனர்!

* * *

கண்களில்நீர்வழியமஞ்சிகைஉட்கார்ந்துகொண்டிருந்தாள். போர்க்களம் சென்றிருந்த தன் காதலனை எண்ணியெண்ணி ஏக்கத்திலாழ்ந்தாள். போர்க்களத்தின் பயங்கரமான காட்சியைக் கற்பனை செய்து பார்த்தாள். அச்சம் அவள் கன்னி உள்ளத்தை நடுநடுங்கச் செய்தது. சோர்ந்து சோர்ந்து உட்கார்ந்தாள், படுத்தாள், புரண்டாள்—அவள் உடலும் உள்ளமும் ஒரு நிலை கொள்ளவில்லை. உயிருக்கு உயிரான, ஏன், அதனைவிட மேலான தன் காதலன், உயிரைப் பணயமாக வைத்து, சிங்கம்போல், வலிமைமிக்க எதிரிகளின் மீது பாய்ந்து போராடுகின்றான் என்றால் இளம் பெண்ணின் திகைப்பையும் பதைபதைப்பையும் அறுதியிட்டுக்கூற இயலுமா?

பதினைந்து நாட்கள், மெள்ள மெள்ள நகர்ந்து வேதனையோடு மறைந்தன! அந்தப் பதினைந்து நாட்களும் பாவைக்குப் பதினைந்து ஆண்டுகளாகத் தோன்றின!

அவன் சுவைத்த தேன் இதழ்கள் துடிதுடித்தன! அவன் அணைத்த மார்பு படபடத்தது! துக்கம் தாங்கமாட்டாது அவள் வாயினின்றும் மெல்லிய ஓசையோடு, வேதனையில் தோய்த்தெடுத்த வார்த்தைகள் வெளியே வந்தன!

"சேரனின் படைபலம் மிக அதிகம் என்று அத்தானே கூறியிருக்கிறாரே! அத்துடன் சேரப்பன் பொல்லாதவன், வஞ்சகன், ஈவு இரக்கமற்றவன் என்றெல்லாம் கூறுகிறார்களே! கபடம் நிறைந்த அவனுக்குப் படைபலம் வேறு அதிகம்; இந்த நிலையில் நம் படைக்கு வெற்றி கிட்டுமா?......... போர்!போர்! போர்! ஏன் இந்தப் போர்! மன்னர்களைப் பிடித்தாட்டும் மண்ணாசைக்காக மாவீரர்களின் இரத்தம் சிந்தப்பட வேண்டுமா? ஒரு மனிதனின் தேவைக்காக மிகப் பலரின் உதிரம் கொட்டப்பட வேண்டுமா? பிணங்கள் குன்றுபோல் குவிய வேண்டுமா? எலும்புக்கூடுகள் அடுக்கப்பட வேண்டுமா?......என்ன? என்ன? நானா இப்படி எல்லாம் எண்ணுகிறேன்? சேசே! இது தகாது! சோழநாட்டு வீர மகளிரின் உள்ளம் சோர்வோ சோகமோ கொள்ளலாகுமா? தன் ஒரே மகனுக்கு எண்ணெய் தடவி, தலைவாரி போர்க்களம் நோக்கிச் செல்க எனக் கூறிய அஞ்சாநெஞ்சம் படைத்த அன்னையர் தோன்றிய நாட்டில் பிறந்தவள் அல்லவா நான்? ஆம்! மாவீரர் என் காதலர்! மறக்குடியில் உதித்த மங்கைநான்! வீரத்தோடு போரிட்டு, ஆணவ வெறியர்களை விரட்டித் துரத்தி விட்டு வெற்றியோடு வீடு திரும்புவார்! மட்டில்லா மகிழ்ச்சியோடு வரவேற்பேன்! ஆமாம்! நிச்சயம் வரவேற்பேன். ஆணழகர் என்னை அள்ளி எடுத்து ஆரத்தழுவி இன்பமளிப்பார். அன்றுபோல், ஆயுள் முழுவதும், தமிழும் அதன் இன்று இனிமையும்போல இரண்டறக் கலந்திருப்போம்!......" இப்படி அவள் வீரத்தோடு ஏதேதோ தன் மனம்போன போக்கில் பேசிக் கொண்டிருந்தாள்.

"மஞ்சிகா" என்ற குரலொலி கேட்டது! மான்போல் துள்ளி எழுந்தாள். புருவங்கள் மேலேறின. வேல் விழிகள் அகல விரிந்தன. தாமரை முகம் மலர்ந்தது. அவள் மார்பு பூரித்து விம்மியது. அடிமூச்சுக் குரலாலே "அத்தான்" என்றாள். "கண்ணே" என்றான். பறந்தாள்! பரந்தமார்பில் படர்ந்தாள்!

"அத்தான் வந்துவிட்டீர்களா?"

"ஏன், வரமாட்டேன் என்று எதிர்பார்த்தாயா?"

"இல்லை, இல்லை அத்தான். இவ்வளவு விரைவாகவா போர் முடிந்துவிட்டது என்று கேட்டேன்!"

"போர் முடிந்துவிட்டது உனக்குத் தெரியாதா?"

"தெரியாதே அத்தான்!"

"வெற்றிமுரசு முழங்கியது உன் காதுகளுக்குக் கேட்கவில்லையா?"

"இல்லையே, அத்தான்!"

"அப்படியானால் நீ சிந்தனையிலேயே மூழ்கி விட்டிருந்தாயா?"

"அத்தான், சிறுகச் சிறுக இறந்து கொண்டே இருந்தேன்!"

"இப்பொழுது?"

"ஊம் ஹூம் சொல்லமாட்டேன்! .........அதிருக்கட்டும் அத்தான், சேரனின் படைபலம் அதிகமென்றீரே, எப்படி அவர்களை வெல்ல முடிந்தது?"

"பெருத்த சிரமமாகத்தான் இருந்தது! சோழநாட்டு வீரர்கள் எண்ணிக்கையில் குறைந்தவர்கள்! ஆனால் வீரத்தில் உயர்ந்தவர்கள்! யானை உருவில் பெரிது! சிங்கம் சிறியது! போரிட்டால் எது வெற்றி பெறும்?"

"சிங்கம்!"

"அதுதான் சோழன்படை!"

"தங்கள் தோளிற்கு இணையான தோள் இவ் வுலகிலேயே கிடையாது, அத்தான்!"

"கண்ணே, பேசிக்கொண்டே இருந்தால்? வெற்றிபெற்ற எனக்கு வெகுமதி கிடையாதா?"

"கேளுங்கள்! எது வேண்டுமானாலும் கேளுங்கள்! உங்கள் ஆசை எவ்வளவுதூரம் ஓடுகிறதோ, அவ்வளவு கேளுங்கள்! தட்டியின்றித் தர நான் சித்தமாய் உள்ளேன்!"

"என் ஆசை—நீ அறியாயா?"

"என் உள்ளம் — தங்களுக்குத் தெரியாதா?"

போர்க்களத்திலிருந்து வெற்றி மாலை சூடி திரும்பிய மகிணனும் மஞ்சிகையும் இன்பமாய்ப் பேசி, இவ்வுலகை மறந்து விண்ணில் பறந்தார்கள்.

* * *

ஆற்றங் கரையோரத்தில் தன் காதலியைச் சந்திப்பதற்காக, தாமரை பூத்த தடாகத்தின் வழியாக ஒருநாள் மாலை மகிணன் போய்க்கொண்டிருந்தான், எதிரில் ஆரியன் வருவதைக் கண்டதும் வெறுப்பால் அவன் முகம் மாறியது. ஆரியன் அருகில் வந்தான்.

"மாவீரரே, உம்மைத்தான் தேடிக்கொண்டுவந்தேன். கடவுள் கடாட்சத்தால் கண்டுபிடித்து விட்டேன்!"

"ஆரியரே, ஏதேது என்னிடமே கடவுள், கடாட்சம் என்றெல்லாம் துணிந்து கூற ஆரம்பித்து விட்டீர்?"

"வீரா! உமக்கேன் சாதுகளான என் இனத்தவரிடத்தில் பகைமை! நாங்கள் அப்படி என்ன செய்கிறோம்?"

"என்ன செய்கிறீரா? எதனைச் செய்யாமல் இருக்கிறீர்கள்? அழகிகளை ஆடவிடுகிறீர்கள், பாடச் செய்கிறீர்கள், அரசுகளில் அதிகாரம் பெறுகிறீர்கள்! அறியாமையைப் பரப்புகிறீர்கள். அறிவிலிகளைப் பெருக்குகிறீர்கள்! ஒரு நாடு சீரழிய இதனைவிட வேறு என்ன செய்ய வேண்டும் ஆரியரே!"

"நாடு சீரழியவா? சிவசிவ! மேலும் மேலும் செழிப்படைந்து செல்வம் பெருகவேண்டுமென்று, தினந்தினம் இந்திரனை வேண்டுகிறோம், வாயுவையும் வருணனையும் வணங்குகிறோம், அக்னியைப் பிரார்த்திக்கிறோம்!........"

"போதும் நிறுத்துமய்யா! என்ன, வேதாந்தத்தின் சரடு நீண்டுகொண்டே போகிறதே!"

"வீரா! உம்மிடம் ஒரு முக்கியமான விஷயம் பேச விரும்புகிறேன்."

"கடவுள், மதம், கோயில், குட்டை—இப்படி எதைக்குறித்தாகிலும் பேச...."

"சேச்சே! அப்படி யொன்றுமில்லை. உன் நன்மையைக் கருதியே, ஒரு ரகசியம் தெரிவிக்க ஆசைப்படுகிறேன்!"

"ரகசியமா?"

"ஆமாம், மிகவும் ரகசியம்! என் இனத்தை எதிரியாய் நீங்கள் நினைக்கிறீர்கள்! ஆனால் உம்மிடத்தில் எனக்கேனோ ஒருவித பாசமும் பற்றும் ஏற்பட்டுவிட்டது! என்னால் ஆன ஒரு காரியத்தை—தாங்கள் விரும்பினால் — செய்து வைக்கலாம் என்று நம்புகிறேன்"

"ரகசியமென்றீரே அதனைக் கூறும், மற்றவற்றைக் கேட்டுக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை."

மெதுவாக சிறிதுநேரம் அவன் காதில் ஆரியன ஏதேதோ கூறினான். அதனைக் கேட்கக்கேட்க மகிணனின் கண்களில் கோபக் கனல் பறந்தது. அவன் கோபத்தைப் பொருட்படுத்தாது, ஆரியன் புன்னகை செய்து விட்டு, மேலும் பேசத் தொடங்கினான்.

"ஆரியரே! போதும் நிறுத்தும்! என்னை என்னவென்று எண்ணிக் கொண்டீர்?......இதனை என்னிடம் கூறும்படிச்சொல்ல அந்த நீசனுக்கு அவ்வளவு தைரியமா வந்துவிட்டது? கடந்த ஆண்டுதானே அந்தக் கயவன் என் வாள் வலிமையை அறிந்தான்! அதன் பிறகுமா அவனுக்கு இந்தத் துணிவு?"

"உங்கள் கையிலுள்ள போர்வாள்தான் அவரைத் தங்களிடம் தோழமை கொள்ளச் செய்தது!"

"தோழமையா? விநோதமாகவிருக்கிறதே!"

"இதிலென்ன விநோதம், வீரா! தங்களை அவர் எவ்வளவு புகழு

(8-ம் பக்கம் பார்க்க)



Edited, Printed and Published by P. C. Manickavachagam alias Kanchi Manimoliyar at Free Printers 147, Coral Merchant St., Madras. Joint Editor, M. Ilancheliyan B A. (Hons)

